உ

சிவகுருமயம்

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாச பரம்பரைத்

திருவாவடுதுறையாதீனத்துத்

திராவிட மாபாடியக் கர்த்தராகிய

ஸ்ரீ மாதவச்

# சிவஞானசுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

இஃது

தேவகோட்டை

ஸ்ரீமான் மெ. அரு. நா.

இராமநாதச்செட்டியாரவர்கள்

சைவசித்தாந்த [illegible] வித்தியாசாலை மாணவரும், [illegible]

சம்பிரதாயத்து விசேட [illegible] உடையாரும்

[illegible] தமிழ்ப் [illegible] கருமாகிய

ஆ. [illegible] மாணாக்கருமான

திருவோத்தூர்

வீ. திருஞானசம்பந்த முதலியாரால்

முன்னைந்து பருவமும்

[illegible] வித்தியாசாலை மாணவரும், திருவாவடுதுறை யாதீன

மகாவித்துவான் சேற்றூர்

மு. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள் மாணாக்கருமாகிய

ஆலங்காடு

வை. செல்லையாச்செட்டியாரால்

பின்னைந்து பருவமும் இயற்றப்பெற்று

செட்டியூர் ஸ்ரீமான் அழ. சித. அழ.

அழகப்பசெட்டியாரவர்கள்

பொருளுதவியால்

தேவகோட்டை

வைசியமித்திரன் பிரஸில்

அச்சிடப்பெற்றது.

1922.

உ

சிவகுகமயம்

திருச்சிற்றம்பலம்.

திருக்கைலாச பரம்பரைத்

திருவாவடுதுறையாதீனத்துத்

திராவிடமாபாடியகர்த்தராகிய

ஸ்ரீ மாதவச்

# சிவஞானசுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

இஃது

தேவகோட்டை

ஸ்ரீமான் மெ. அரு. நா.

இராமநாதன்செட்டியாரவர்கள்

சைவசித்தாந்த வித்தியாசாலை மாணவரும், மதுரைத்

தமிழ்ச்சங்கத்து வித்வானும் அவையாம்

நாஷனல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய

அ. ராமபாலையரவர்கள் மாணாக்கருமான

திருவொத்தூர்

வீ. திருஞானசம்பந்த முதலியாரால்

முன்னைந்து பருவமும்

செட்டி வித்தியாசாலை மாணவரும், திருவாவடுதுறை யாதீன

மகாவித்துவான் சேறை

மு. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள் மாணாக்கருமாகிய

ஆலங்காடு

வை. செல்லையாச்செட்டியாரால்

பின்னைந்து பருவமும் இயற்றப்பெற்று

செட்டியூர் ஸ்ரீமான் அழ. சித. அழ.

அழகப்பசெட்டியாரவர்கள்

பொருளுதவியால்

தேவகோட்டை

வைசியமித்திரன் பிரஸில்

அச்சிடப்பெற்றது.

1922.

உ

சிவகுகாயநம.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரங்கள்.

திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சீடரும்
ஷை யாதீனத்து மஹாவித்வான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்
பிள்ளையவர்கள் மாணாக்கரும், தில்லை விடங்கன்
பிரபல வித்துவான் மாரிமுத்துப்பிள்ளை
யவர்கள் புத்திர பௌத்திரரும்
ஆகிய வெண்பாப்புலி

**மகா-௱-௱-ஸ்ரீ தி. சு. வேலுச்சாமிப்பிள்ளையவர்கள்**

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்,

சீர்பூத்த விக்கிரம சிங்கபுரத்
　　துதித்தசிவ ஞான மென்னும்
பேர்பூத்த யோகிகண்மேற் பிறங்குபிள்ளைத்
　　தமிழ்ப்பனுவல் பிரசந் தானே
பார்பூத்த முக்கனியோ பாகமிர்தோ
　　வெனவுரைநாப் பயன்றன் றுய்ப்பா
னேர்பூத்த வினியமொழி யிசைத்தியற்றி
　　னொருவ ரிவர்யா ரென்னில் (1)

ஒப்பருநூ லிருவருமே வொருங்குபயின்
　　றோரிரட்டை யோர்தா மென்ன
வப்பனுவல் பகிர்ந்தையைந் தையைந்து
　　தொகைச்செய்யு ளாகச் செய்தார்
தப்பறுவீ ராசாமி தநகைஞனல்கு
　　திருஞான சம்பந் தச்சேய்
செப்பருவைத் தியலிங்கச் செம்மலருள்
　　செல்லையச் செட்டி யாரே. (2)

செய்யாறு போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்
பண்டிதராகிய திரிசிரபுரம் வித்துவான்

## மகா-ள-ள-ஸ்ரீ சொ. வீரபத்திரப்பிள்ளையவர்கள்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

சீர்கொண்ட சிவஞான போதச்செம் பொருள்கொண்டு
செல்ல னீங்கப
பார்கொண்ட சைவரெலாம் வாழ்ந்துய்ந்து போகமெலாம்
பரிவு கூர
ஏர்கொண்ட வளவையினு லளந்தளித்த தடங்கருணை
யெழிலி யான
பேர்கொண்ட சிவஞான யோகியெனுந் திருத்துறைசைப்
பெருமான் மீதே. (1)

நாற்பாதத் திறனுணர்ந்து நானிலத்தோ ருய்யவரு
ளுதா நீரு
நாற்பாதத் தாலெடுத்த வடியேங்கள் புணைமொழியை
நயந்துள் கூர
வேற்பாலென் றிடையிடையே யினியபத்திச் சுவைததும்ப
வியம்பி னார்தம்
போற்பாரிற் றமிழ்ப்புலவர் யாவருங்கண் டிசைக்கும்
பொருண்மீக் கொண்டே (2)

மெய்யடியார் திருத்தொண்டு விழைவீரா சாமியெனு
மேலோன் செய்த
பொய்யிறவப் பயனை திருஞான சம்பந்தப்
புலவ னோடு
செய்யமரா லங்காட்டின் வயித்தியலிங் கம்பயந்த
செல்லை யாப்ப
ஐயனுமொப் பரியபிள்ளைத் தமிழாக நுவன்றிடுமோ
ரைம்பான் யாப்பே. (3)

யாழ்ப்பாணம் வண்ணைநகர் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதபண்டிதரவர்கள்
மாணாக்கரும், மருங்காபுரிச்சமஸ்தான வித்துவானும்,
பாண்டியன் பத்திராதிபரும் சைவப்பிரசாரகரும்
ஆகிய

## மகா-ள-ள-ஸ்ரீ ஆ. சத்திவேற்பிள்ளையவர்கள்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

மலையமலை மணங்காணத் திரண்ட தொண்டர்
மனமகிழ மலையமலை வந்து வந்த
கலையமலை யுதித்துண்டோன் றனே யென்றல்
காசினியோர்க் கறிவிப்பான் போன்று பாண்டிக்
கலையமலைச் சாரலின்மா லவதா ரங்கள்
தன்னிலிரண் டிணைந்தபெயர்த் தகைமைவாய்ந்த
நிலையமலை வறக்கங்கை குலமுன் செய்த
நெடுந்தவத்தின் பெரும்பயனாய் நிகரிலாத (1)

அன்னைதந்தை சிவன்சிவையென் பதனைத் தங்கட்
கமைந்தபெய ராற்றேற்று மன்பிற் குன்றா
முன்னையருந் தவமுதியோ ரிடத்துச் சூழ்ந்த
மூரிநீ ருலகர்புற விருளை மாற்றுந்
தன்னிகரி றபனர்களா றிருவ ரொன்றாந்
தனியுருக்கொண் டகவிருளுந் தணப்பா னுள்ளத்
துன்னியுதித் தனனென்னத் தோன்றி நின்ற
வுபயமொழிக் கலையனைத்து மொருங்குற் றோர்ந்து (2)

அவஞான மறவோட்டி யருளை நாட்டி
யாதிநா னமையாண்ட வவனே யிந்தச்
சிவஞான குரவனெனப் பெயராற் றேர்ந்து
தனித்துறைசை யடைந்தவன்ற னடியைச்சார்ந்து
பவஞானந் தனைநீக்கிப் பாரில் வீடு
பரிந்துதா தவிப்பவர்கள் பயன்பெற் றுய்யச்
சிவஞான போதபா டியமுன் றந்த
சிவஞான முனிவரெனுந் திருவி னோர்க்கே. (3)

செந்தமிழின் றுறைபயின்று சிறந்து நின்ற
 செம்மையுறு புலவரெலா மகிழ்வீக் கூர்ந்து
தந்துலைக ளசைப்பமறு ரஞ்சேர் பிள்ளைத்
 தமிழ்ப்பிரபந் தந்தேவை நகரின் கண்ணே
சந்தமுறு சைவசித்தாந் தப்பேர் வித்யா
 சாலையின் மாணவரு ளிருவர்கூடி
வந்தமகிழ்ச் சியிற்புனைந்தா ரவரூர் பேரு
 மாநிலத்தோர் தேறவுரைக் குவமன் போடே (4)

முன்னைந்து பருவங்க ளுரைத்தோ னேத்தூர்
 முதுபதிவாழ் தருவீர சாமி நாமன்
றன்னின்கான் முளையென்னத் தோன்றிக் கற்ற
 தக்கதிரு ஞானசம்பந் தப்பேர் பூண்டோன்
பின்னைந்து பருவங்கள் பிறங்கச் சொற்றோன்
 பீடுகெழு பாலவனப் பேரூர்வாழ்க்கை
மன்னுவயித் தியலிங்கம் புதல்வ னாகு
 மாண்புறுசெல் லையனெனு மதிமிக் கோனே. (5)

---

சேற்றூர் சமஸ்தானம் தமிழ் வித்துவான்
விசுவப்பிரமகுலம்

## மகா-௱-௱-ஸ்ரீ ஆ. சங்கரலிங்கபாரதியாரவர்கள்

இயற்றிய

## சிறப்புப்பாயிரம்.

சீர்கொண்ட தமிழ்மணஞ் செறிதுணர்ப் பூமணங்
 கிகழ்கழக மேவுமங்காத்
தென்மேவு கின்றதிரு வாவடு துறைக்கண்வரு
 சிவஞான குருநாதன்மேல்
தார்கொண்ட பாரதி யெனச்சொல்பெண் பிள்ளைத்
 தமிழ்க்கவிச் சொல்லுமெங்கள்
சைவமுறு பெருமக்க ளென்னுமாண் பிள்ளைத்
 தமிழ்க்கவிச் சொல்லுமானப்
பேர்கொண்ட சொல்வள முதிர்ந்தபிள் ளைத்தமிழ்ப்
 பிரபந்த மொன்றியற்றிப்
பிள்ளைத் தமிழ்ப்புகன் றேமருவு மென்றுமப்
 பெரியோர்கள் கருணைபூண்டார்
நார்கொண் டிலங்குமறை முடிவான சித்தாந்த
 நன்னூ லிலக்கியங்கள்
நாளுமுணர் திருஞான சம்பந்த னைமதுசெல்
 லையாவெ னும்புலவரே. (1)





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவாவடுதுறை

# ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

## விநாயகக்கடவுள் வணக்கம்.

மணிகொண்ட வாடகக் கிம்புரிப் பூணொடு
 வளைந்தவொரு கோடுமுச்சில்
மன்னுமிரு நீள்செவியும் வானுலவு முகிலென்ன
 வாக்குமும் மதமுநான்ற
வணிகொண்ட மணிவாயு மடியவர் தமக்கெலா
 மாபத்து வேலைதன்னி
லஞ்சலென் றருளுமெய்க் கருணைநோக் கமுமுடைய
 வைங்கரனை யஞ்சலிப்பாம்
இணிகொண்ட நாலைந்து தோள்கொண்ட வேந்துமுன்
 சீர்கொண்ட மாகயிலையைச்
சேண்கொண்ட தன்னிலங் கைக்கொண் டெடுத்தநா
 டிறல்கெட வழுத்துமணமார்
கணிகொண்ட தண்கொன்றை யம்பர வணிந்தவன்
 கருணைவிழி பெற்றுமகிமை
கருதரிய விக்கிரம சிங்கபுரம் வாழவரு
 காவலன் றமிழ்த்தழையவே.

# காப்புப் பருவம்.

## திருமால்.

சீர்தங்கு பார்த்தனுக் கிரதசா ரதியெனத்
திகழுநா ளிரணமதனிற்
சிரநோக்கி வந்தகோல் சேகரம தாகிடத்
தேரினைப் பாரிறக்கிக்
கார்தங்கு மலைகையாம் பூதனை யெனும்பெணின்
கலசமுலை யமிழ்துறுமுயிருங்
கான்றிடப் பருகியு மிடைத்தொழி லியற்றிடுங்
கரியமா லினிதுகாக்க
ஏர்தங்கு நுண்ணிடைச் சிறுமியர்த முகமான
விந்துவைக் கண்டுவாவி
யெய்ந்திடுஞ் செவ்வல்லி மலரச் சுரும்பின
மிசையந்துதன் மீதுசுலவப்
பார்தங்கு மவர்வன்னி மீதெழும் புகையெனப்
பதறியங் கரநெரித்தே
பனிக்கறை மறைந்திடுந் தண்டலைத் துறைசையம்
பதிஞான பாநுதனையே. (1)

---

## சிவபெருமான்.

காராரு மாணவ மலத்திடை யழுந்திக்
கலங்குறு மனுக்கட்மைக்
கருணையி னெடுத்துடல மாதிமா யையினீந்து
கன்மவொப் புறுதல்கண்டு
பாராரு மெய்ஞ்ஞான குரவனாய் வந்துமேற்
பசுபாச வியல்புணர்த்திப்
பாசங் கெடுத்துநற் பரமுத்தி சேர்க்குமெம்
பரமனடி யஞ்சலிப்பாம்
சீராரு மறிவாளர் தங்களுக் கின்னலே
செய்யினுங் கொள்ளாதுதாஞ்

## காப்புப்பருவம்.

செம்மையே செய்திடுஞ் செய்கைவிழை யத்தனது
சென்னியுற வோச்சிநிகமு
மோராரும் பொற்சுணை மிடிக்குறு முலக்கையா
லெழின்மாதர் தாக்கவுந்தெங்
கிளநீ ருதிர்க்குறுங் கோகழிச் சிவஞான
வேந்தலைக் காக்கவினிதே. (2)

---

## உமாதேவியார்.

திருமருவு புகழ்நீடு காஞ்சியம் பதியினிற்
றிகழுமதி நதியரவனிச்
செஞ்சடைக் கூத்தனிட மிருநாழி நெற்கொண்டு
செம்மைவே ளாளர்தம்மாற்
பெருமைமிகு முப்பத்தி ரண்டறந் தானனி
பிறங்கிடச் செய்தகருணைப்
பீடுகெழு பெண்ணரசி பங்கயப் போதனாம்
பேணியன் பாற்றுதிப்பாம்
தருமருவு மும்பருல கத்தர மடந்தைமார்
தானணிவர வெண்ணிபங்குச்
சார்ந்துயரு மாளிகைச் சோபான வழிகண்டு
தளராது பாரிறங்கி
மருமருவு தண்டலைச் சூழலின் மாதரொடு
வண்டலாட் டிற்றேறுகுநல்
வளமருவு கோமுத்தி புரமருவு சிவஞான
மாமுனி தனைக்காக்கவே. (3)

---

## முருகக்கடவுள்,

பூமேவு மாதுறையு மார்பனொடு விதியும்
புரந்தரனு மாதிபுலவர்
புகலடைந் தின்னுமை சூராதி கொடியவர்கள்
புரிசெயல் புகன்றிட்டநாள்

வைரவக்கடவுள், பிரமதேவன், இந்திரன்,
இலக்குமி, சரசுவதி, காளி, சத்தமாதர், உருத்திரர்,
மருத்துவர், வசுக்கள், சூரியன்.

மடல்கொண்ட மணமாரும் வனசம் பிலிற்றுதேன்
வாரியா வண்டுதிர்க்கும்
மகரந்த மொருவதா வயல்விளைந் தனசாலி
வானுலவு பரிதி ஞாங்கர்ச்
சுடர்கொண்ட வாடகக் காம்புடைக் கவரிவெண்
டொகைபோல நின்றசையுறுந்
சொல்லரும் பானல்புடை சூழ்துறைசை மாதவத்
தூயவனை யினிதுகாக்க
திடர்கொண்ட வாகுவடு கனுமம் புயத்தனுந்
தேவதரு வுக்கிறைவனுஞ்
செந்தா மரைப்பொறியும் வெண்டா மரைப்பெணுஞ்
சீர்கொண்ட மாகாளியும்
படர்கொண்ட கடிதடத் தொருசத்த மாதரும்
பகருருத் திரர்மருத்வர்
பாசுறு வசுக்கள்பக லோனுமிவ ராதியாம்
பண்ணவர் தமைப்போற்றுவாம் (6)

காப்புப்பருவம் முற்றிற்று.

---

## செங்கீரைப் பருவம்.

சீர்பூத்த திருமேனி மஞ்சனத் தாட்டியொண்
செம்பங் கயத்தன்னநின்
றிவ்விய முகத்திலக் கிழைத்தபொட் டிடுபுசெந்
தேனூறு திருவாயினிற்

மன்னிய பெருங்கணத் தேவன் றனக்கருள்
பரசசிவ ஞானபோதம்
பாருலகி னின்றிட வதற்கொரு விருத்திபா
பாடியம் வரைந்தநின்ற
ஒன்னிய திருக்கர நிலத்தினிடை யூன்றிமற்
றொருமுழந் தாளையூன்றி
யொருமுழந் தாள்பிறை நீட்டியே வில்லுமிழு
மொண்மணிச் சுட்டிசேர்ந்த
சென்னிய தசைந்திடச் சித்தாந்த வண்ணலே
செங்கீரை யாடியருளே
செந்தமிழ்ச் சுவையுண்ட சிவஞானமுனிவனே
செங்கீரை யாடியருளே. (3)

---

வேறு.

சயமுறு நால்வ ரருந்தமிழ் மாமறை சார்ந்தெவ ரும்பாடத்
தாவறு நான்மறை யாகம நெறிதுறை சர்ச்சனர் கொண்டாட
வயர்வுறு பரசம யக்கழு தஞ்சியலைந்தன வாயோட
வார்மல மாய்ந்தெளி நாயடி யேனுன தடியிணை யிற்கூட
நயமுறு சைவவ ருங்கலை மாதவர் நன்கக மேனாட
ஞான வரும்பெரு மாதவ நன்னெறி நனியுல கினினீட
வயனரி பரவுறு மாவடு துறைமுனி யாடுக செங்கீரை
யன்புரு வாஞ்சிவ ஞான வருந்தவ னாடுக செங்கீரை. (4)

மருவமர் பரசம யக்களி றோட வரும்பஞ் சானனமே
மண்டலம் வாழச் சைவப் பயிரை வளர்த்த பசும்புயலே
கருவற வாருயி ராணவ விருள்வலி கடியு மிருங்கதிரே
காசினி யிற்சிவ போதம் விரித்திசை கஞல்கரு ணைக்கடலே
பொருவரு பூதிய ணிந்த புரந்திகழ் புண்ணிய மெய்ப்பயனே
புல்லறிவோடவொழித்தெனையாண்டருள்புனிதகருணைக்குன்றே
அருமறை யோர்வதி கோகழி யாண்டவ னாடுக செங்கீரை
அன்புரு வாஞ்சிவ ஞானவருந்தவ னாடுக செங்கீரை (5)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

# தாலப் பருவம்.

திங்கள் வதனச் சிலை நுதலார் திரண்மா மணிக்கல் லாலிழைத்த
செம்பொற் றலத்து மாளிகையின்சிகரத் தரிந்தவகிற்புகையாற்
றங்கட் கூந்த றனைப்புலர்த்தத் தருவிற் றங்கு மயிலினங்கள்
சலங்கொள் மேக மென்றெண்ணித் தழையுந் தோகைவிரித்தா
பொங்கு நகையின் மிகுநிலவைப் புட்சகோரந் தானருந்தப் [டப்
புதுமென் மலர்க ளளிக்குலங்கள் பொழிதே னுண்ணும் பொழின்
[ஞாங்கர்ச்
சங்க முராலும் பணைத்துறைசைத் தலைவா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த சைவா தாலோ தாலேலோ (1)

கால்பாய் வாவி வயின்படிந்த கயவாய்ச் செங்கண் கருங்கோட்டுக்
கவரி யினம்பூப் பலகறித்துக் கான்றிக் கன்று தனைநினைத்துப்
பால்பாய் தருமா றாற்றவதன் பரப்பின் றிரையா லலைந்தசையும்
பங்க யத்தோ டிமங்களெலாம் பயந்தார்த்தகல்வான் பறந்தோடச்
சேல்பாய் மருதப் பூம்பணைசேர் சிகரத் துறங்கக் கொண்டலினந்
திகழுஞ் சோலை விக்கிரம சிங்கபுரத்திற் றோன்றுமருட்
சால்பார் கற்பின் மயிலம்மை தனையா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த சைவா தாலோ தாலேலோ (2)

தண்ணம் பசுங்கற் றாணிறுவித் தழைத்த துகிர்விட் டங்கிடத்தித்
தரளக் கோவை நான்மருங்குந் தாழ வயிரத் தாம் பிறுக்கி
வண்ண வொளிச்செம் மணியிழைத்த மாசைப் பெருந்தொட்டி
[லினிருத்தி
வடிவஞ் சனக்க ணாலிடையை மருவு மடந்தைத் தாதியர்கள்
பண்ணு மிசையுஞ் சேர்ந்தமைந்த பாக்கள் பலவு மிசைத்தாட்டப்
பார்த்துக்களிக்கு மயிலம்மை பயிற்றுந் தவத்துப் பயனாய
தண்ணம் புலிமா ளிகைத்துறைசைத் தலைவா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த சைவா தாலோ தாலேலோ (3)

அன்னங் கடுக்கு மடநடையு மமுதங் கடுக்கு மென்மொழியு
மமைந்த மடவார் குழற்புலர்த்து மகிலின் புகையாற் செங்கெலினைப்

பன்னூற் கலைபயிற் சிறுமியர்கள் பைங்கட் கரும்பே யரிவையும்
பாருக் கருமைக் கழகனவும் பகர்ந்து கூடித் தத்தமனை
முன்னித் தவனிந்த படியாக வரைந்து வரைந்துப் பெருமாயா
மேவாதக் கழுந்திக் கம்மாறு மொல்வாச சமயம சொல்லாய்ந்த
தன்மைக் கழனித் துறைசைநகர்த் தலைவா தாலோ தாலேலோ
சாற்றும் பெருமைச் சித்தாந்த சைவா தாலோ தாலேலோ (4)

வேறு.

சேடு விரைப்புனி தப்பொனி நீள்கரை சென்று குயிற்றுமணற்
சிற்றி லழித்தலை செல்லுதல் கண்டு செயிர்த்தொருமை யின்றுடன்
மாடு பகர்ந்தனை யச்ச முறுத்துவம் வல்லாரி னென்றகலும்
மள்ள மடந்தையர் நீக்கி யெறிந்த மணிக்கா தோலையொளி
நீடு கதிர்க்கவி ரின்மல ரேய்க்க நடப்பவர் நீளாறு
நேர்புலம் பேதுறுக் கும்பல வின்கனி நீள்வால் மந்தியினந்
சாடு பொழிற்றிரு வாவடு துறைமுனி தாலோ தாலேலோ (5)
தாண்மலர் பற்றெனை யாளு முயிர்க்குயிர் தாலோ தாலேலோ.

தாலப்பருவம் முற்றிற்று.

---

## சப்பாணிப் பருவம்.

பொங்கொளி பரந்தமணி மாளிகையின் மேனுறும்
புனிதமட மாதர்வானிற்
பொலிதரு மிளாக்கதிர் விளக்குத்த மார்புறப்
புயமீ தணைத்திருத்தித்
தங்குமவ னெழிலுற்று நோக்கிநாங் கூவிடுஞ்
சமயத் தெலாம்வருகெனச்
சாற்றிவா னேகவிட் டேகுறும் வளந்தங்கு
தண்டுறைசை வீற்றிருந்துப்
புங்கவ ரெலாங்கண்டு நெஞ்சமகிழ் வுறவறப்
புரத்தர் பரசின்னண்டனம்

பொன்ற வதனுக்கொரு விருத்தியுறு கண்டனம்
பொறித்த வயிரத்திழைத்த
தங்கக்கை யணிகொண்ட புங்கக் கரங்கொண்டு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
சப்பாணி கொட்டியருளே. (1)

ஓங்கு கயிலாயத் திருந்தருள் பரம்பொரு
ளுயர்கங்கை யும்பிறையையு
முரைதரு பிதாமகன் கேசவன் றலைமாலை
யுங்கொன்றை யும்போகியுந்
தேங்கொளிக் கறைமிடறு மழுவுமின மானொடுஞ்
செஞ்சடையு மிணையவாகச்
செப்புமிவை யாவுங் கரந்துபின் வேலப்ப
தேசிக னெனவுதித்துப்
பாங்கி னடியார்மலக் காடற வழித்துமெய்ப்
பத்திவித் திட்டெழிலுறும்
பசுமுத்தி புரமேவி வீற்றினி திருந்தவன்
பாற்சமய முதன்மூன்றையுந்
தாங்கிநற் றுறைசையம் பதிமேவு சைவனே
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
சப்பாணி கொட்டியருளே. (2)

மருமருவு மென்கூந்த லஞ்சனக் கண்ணுடை
மடந்தையரும் வெங்கோபமார்
மடங்க லனையாரும் புணர்ச்சிப் பெரும்பூசல்
மருவவத ளலணிந்த
திருமருவுசெந்தா மரைத்தொடை யலைந்துகீழ்
சிந்துமகரந்தங்களுஞ்
செம்பஞ் சுலர்ந்துகொட் டுந்துகளு மானனச்
செங்குங்கு மத்துகளுமாய்க்
குருமருவு சைவலக் குண்டகழி மூடிடக்
குடைவேழ மொண்காரத்தாற்

கொங்கம்பு கொண்டுநொச் சிக்கொடி கிழித்தமைக்
கொண்மூத் துவாரம் விசத்
தருமருவு வான்மணங் கமழ்துறைசை மாதவன்
சப்பாணி கொட்டியருளே.
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
சப்பாணி கொட்டியருளே. (3)

வம்புறு மலர்க்குழற் சேனெடுங் கட்டிகிர்
வாய்மரைக் கோங்கரும்பார்
வாராணி கனக்கொங்கை மாதர்தங் காலணி
மணிச்சிலம் பின்முழக்கு
மம்புறு கருங்கொண்ட லின்முழக் கும்வீர
ரணிகழன் முழக்குமழலை
யார்சிறு மகாரரை யணிந்தவம் படையினோ
டார்கிண் கிணிம்முழக்கும்
நம்புறு மறச்சாலை யிட்டிசெய் திடுசாலை
நடனசா லைகண்முழக்கும்
நான்மறை முழக்கமுந் திந்தமிழ் முழக்கமும்
நண்ணரச வனமேவிடுஞ்
சம்புவினை யேபூசை செய்யுந் திருக்கைகொடு
சப்பாணி கொட்டியருளே.
தண்டமிழ்ச் சிவஞான பாடியத் தலைவனே
சப்பாணி கொட்டியருளே. (4)

வேறு.

புண்ணிய மெய்ப்பயன் கொள்ள விளைந்திடு போதப் பெருநிலையே
போற்றுசித் தாந்த நெறிப்பயி ரோங்க வளர்த்த பசும்புனலே
எண்ணிய வெவ்வினை யாரணி யத்தை யெரித்த விருங்கனலே
இடருறு பரசம யத்துகள் வீய வெடுத்தெறி யும்வளியே
பண்ணிய மெய்த்தவ ருள்ள நிலாவி விரிந்து பயில்வெளியே
பாலனென னெஞ்சு பதிந்து பரந்து விளங்கு பரஞ்சுடரே
தண்ணிய வன்புரு வான பெருந்தவ கொட்டுக சப்பாணி
தண்டலை சூழ்புடை கோகழி மாமுனி கொட்டுக சப்பாணி (5)

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

# முத்தப்பருவம்.

கன்னற் படுகிக் கிலமொடுபைங் கழைபிற் படுகித் திலமுமழைக்
கடமாக் கோட்டுத் தரளமுமென் கதலித் தரள முங்கொடுசீ
றுன்னற் கரிதாய் வரும்பொன்னி யோதத் திரைக்கை யாற்குவிக்க
வோங்குங் குவட்டின் பொருப்பேறி யொளிமென் கூந்தற் சிறுமியர்
பண்ணும் விசும்பிற் பொலிவுறும்வெண் பனிமாமதியின் . வசமிர்தம் [தாம்
பருக நினைத்துத் தணைக்கரத்தாற் பற்றுமருதப் பெரும்வளமை
முன்னூர் துறைசைப் பெரும்பதிவாழ் முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான முனிவா முத்தந் தருகவே (1)

ஆடுங் கறங்கின் பலயோனி யலமந் துழன்றுப் பிறந்திறந்தே
வல்லற் படுமித் துயர்நீங்க வருமைப் பெருஞ்சா தனநெறிதான்
வாடும் புவிவாழ் பவர்தமக்கு மன்னுஞ் சரியை முதன்மூன்றும்
வரப்பெற் றதன்மேல் ஞானமெனு மார்க்க நாடிச் சகலகலை
கூடு ஞானஞ் சாத்திரங்கள் கூறும் பொருள்கள் கீழெனவே
கொண்டு கழித்துச் சிவத்தினொடுங் கூடுமிதுவே யெனமொழியு
மூடுங் குருமக் கோகழிவாழ் முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான முனிவா முத்தந்தருகவே. (2)

அண்டர் துதிக்குந் தண்டகநாட் டமரும் பழைய னூரவையி
னல்லற் புரியு நீலியைக்கண் டஞ்சி நடுங்கும் வணிகனுக்கா
வண்டு தளிர்செங் காமனைவி மருவி வாழ்நின் னுயிர்க்கிறுதி
வருமே லாவி துறப்பமென வன்னி முழுகி மொழிகாத்துக்
கொண்ட பெருமை யாலவனக் கூத்தர் பாதஞ் சேர்ந்தவர்தங்
குலவேளாளர் மரபினிலங் குரித்துச் சைவப் பொருள்விரிக்கு
முண்டகச்செந் தடத்துறைசை முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான முனிவா முத்தந் தருகவே. (3)

கொம்மைப் பெரும்ப யோதரமென் கூந்தற் கருங்கட் சிறுமாதர்
கூடிக் கனித்து விளையாடுங் குருகீ லச்செய் குன்றினொளி
செம்மைப் பொன்னாட் டினிற்பரவச் சிதக் கருவி னிழன்மேயுந்
தெய்வச் சுரபிப் பசும்புலெனச் செந்தா வளைக்கும் பைம்பொ
[ழில்வாய்ச்

சும்மைச் சுருதி நாகணவாய் சொல்லச் சுகங்கள் முறைபயிலுந்
தொன்மைப் பெருஞ்சீ ராவடுதண் டுறையின்மருங் குலமணியே
மும்மைத் திமிர மறக்களைந்த முதல்வா முத்தந் தருகவே
மொழியுந் தவத்துச் சிவஞான முனிவா முத்தந் தருகவே. (4)

வேறு.

உருவா முடம்பே யாமென்று மொழிகு ணியமே யாமென்று
முழலும் பொறியே யாமென்று முரைக்கும் புரியட் டகமென்று
மருவாம் பிராணக் காலென்று மழியாப் பிரம மாமென்று
மறைந்த விவற்றின் குழுவென்று மரற்றி யரற்றி யுயிரியல்லை
மருவா துண்மை யுணரா து மயங்கி மயங்கிப் பிணங்கிடுமிம்
மருவார் கலக மறவுதித்த மறுவின் மணியே மணிமாடத்
திருவா வடுதண் டுறைமருவு செல்வா தருக முத்தமே
சிவஞா னத்துப் பெருநாமச் சித்தா தருக முத்தமே. (5)

முத்தம்பருவம் முற்றிற்று.

# வருகைப் பருவம்.

தேசுற்ற செம்மணி செறித்திழைத் திடுமாட
சிகரபந் திகளளவிலாத்
தினகர்க ளொய்த்துறற் பகலிரவு தெரியாது
செய்யும்வெயி லான்மயங்கிக்
காசற்ற பதுமமெக் காலும்வாய் குவியாது
கண்மலர்ந் திடவுமாம்பல்
காதல னுதிப்பவு மயங்கிமல ராமலெக்
காலுமுகி ழாகவுமுறும்
பேசுற்ற பெருவளம் பெறுவிக்கி ரமசிங்க
பேரமர் புரத்துதித்தே
பேணிவரு வேலப்ப தேசிக னருட்பேறு
பெற்றுச் சிறந்தபெரியோ
யேசற்ற சிவஞான மாமுனிவ னேமகிழ்ந்
தேழையேன் முன்வருகவே
யெத்தவரு மேத்துகோ முத்திபுர மேவியுறை
யெந்தம் பிரான்வருகவே. (1)

பங்கய மெனப்பொலிவு தங்குவத னக்குமிழ்
பறித்துநான் றசைபுலாக்கிற்
படுவயிர மணியதர வொளிவிழியி னொளியளாய்ப்
பாவுதவி ஞற்குன்றியின்
பொங்குமணி யெய்ப்பப் புலந்தவை துறந்திவை
புனைந்தன வெனப்பதைத்துப்
போற்றியிவை கொள்ளை லெனக்கணவ ருரைசெயப்
புன்னகை யியற்றுமடவார்
தங்குமே னிலையினிற் சாளரத் தாடியிற்
சந்திர னுலாவுமேர்கொள்
தருவிக்கி ரமசிங்க புரமே யுதித்தநற்
றண்ண முத மாசலதியே
யிங்குசிவ ஞானமா பாடியக் கையினொடு
மேழையேன் முன்வருகவே
யெத்துவரு மேத்துகோ முத்திபுர மேவியுறை
யெந்தம் பிரான்வருகவே. (2)

மாமறையி னேசைகிளி வாசகனை யினேதுபுடை
வாழ்பொழிலி னூடுமருவும்
வானுலகை மேயதரு வாழ்சுக மு மோதுமுறை
வாயப் பயிற்றியிடையிற்
றாமமென வாழ்முகிலி னல்வருத லறியாது
துன்னியத் தருவின்வாழுஞ்
சுகமோடு நட்புறீ வாழவுங் கிழமைத்
துணையாக வும்பெருவளந்
தாமமுற வாழ்விக்கி ரமசிங்க புரமேவு
தாவிலா வேளாண்குலத்
தகைமைசேர் குலமணித் தீபமா யடிமையேன்
றன்மனத் தவிசமர்ந்தோய்
ஏமமுற வோதுமா பாடியக் கையினொடு
மேழையேன் முன்வருகவே
யெத்தவரு மேத்துகோ முத்திபுர மேவியுறை
யெந்தம் பிரான்வருகவே. (3)

வருகைப்பருவம்.

## வேறு.

திருவார் துறைசைப பதியமர்ந்த சிகன்வே லப்பச் செம்மறுறை
நீக்கை மூன்று மடைந்துதவுந திருவற் கலையு மணிந்துதவா
பெருகா னந்தப பெருங்கடலே பிறவிக் கடற்க்கார் புணையாக
பிறங்கும் வெண்ணெய் மெய்கண்டான் பேசும் போதந் தனக்குலகோா
கருவரு தனையிற் கழனறுசிவன் கழலச்சேர்ந் திடபா பாடியருசெ
கருணைப் பெருககே யடியன்மனக் கமலம் விரிக்குங் கதிரொளியே
தெருளை யளிக்குஞ் சிவஞானச செல்வா வருக வருகவே
சித்தத் தினிக்கு மானந்தத் தேனே வருக வருகவே. (4)

கோனே வருக களங்கமிலாக் குலமா மதியே வருகவருட்
குன்றே வருக மெய்ஞ்ஞானக் குருவே வருக சிவன்கழலை
யானு தறிவோய் வருகவென வையா வருக வெனதாவிக
கரசே வருக சிவஞான மளித்திங் கடிமை கொண்டெனையுந்
தானுந் தகைசெய் வோய்வருக தவத்தோர் புகழுந் தவவருக
தருவிக் கிரம சிங்கபுரந தனிமே வாண்டொல் குலத்திந்த
தேனே வருக சிவஞானச் செல்வா வருக வருகவே
சித்தத் தினிக்கு மானந்தத் தேனே வருக வருகவே (5)

வருகைப்பருவம் முற்றிற்று.

---

# அம்புலிப் பருவம்.

அம்பரந் தோன்றலா லமுதகலை புடைமையா
லகறுரை யைத்தழுவலா
லங்காவி யுடைமையா லவனியோர் புகழ்தலா
லரியென்று மிலகிவரலாற்
பம்புமதி யோனெனப் படுதலா லணியுறும்
பாவெற் றுடைமையதனாற்
பரமனக் காமெனக் கோடலா லொப்புமை
பரித்தனை யெனத்தவனிவ
ணிம்பரினி லாடுதற் கெண்ணிவா வாவென்
றிணைக்கரம தாலழைத்தா

னித்தருணை நீபெற்ற நற்றவப் பயனலா
    லில்லையிஃ துண்மையிறைவா
யம்பணியு மண்ணலை யறிந்தசிவ ஞானியினெ
    டம்புலீ யாடவாவே
யழகுமலி கோகழிச் சிவஞான முனிவனெ
    டம்புலீ யாடவாவே. (1)

பாதிமதி யோனெனப் படுவைநீ நிறைமதிப்
    பண்ணவ னிவன்குறைகலைப்
பண்புளாய் நீயிவன் நிறைகலையி னுடற்
    படுகளங் கொன்றுடையைநீ
தீதுறு களங்கமரு வுதவிலாத் தவனிவன்
    றெரிவையர் மயற்போகிநீ
தேரினவை யில்பரம யோகியிவ னெட்டுணைச்
    செய்தியினு மொப்புமையிலா
யோதினை யோர்பொருட் டாயமைத் திடுகருணை
    யொல்லென வுணர்ந்துமுன்செய்
யுத்தமப் பயனலாற் பிரிதிலை யெனத்தெளிந்
    துன்முக மறந்துவிறைவா
யாதிநடு வீறிலா வம்பொரு ளுணர்ந்தவனெ
    டம்புலீ யாடவாவே
யழகுமலி கோகழிச் சிவஞான முனிவனெ
    டம்புலீ யாடவாவே. (2)

மூன்றைந் திரண்டனுரு பிற்றுயில் முராரிதன்
    முடியின்மே லடிவைத்துமுன்
முறைமையிற் றீக்கைசெய் தருண்முனிவ னுமென
    முயங்குமிவ னைப்பெறுதியேற்
கான்றவெங் கொடுவிடப் பகுவாயி னரவினைக்
    கண்டுபற் றுதகலவுங்
கருணைசெய் குவனுடற் படுமாசு நீக்குவன்
    கலையென்று நிலவவருள்வன்
மூன்றுகுர வன்பன்னி யைப்புணர்ந் திடுதலாற்
    றுலையிலா மாபாதகத்

றுகளாறுத் தெண்ணியவை யாவையு மளிப்பளித்
 தூயவற் கரியதெவைகாண்
ஆன்றசிவ ஞானபோ தப்பொருள் விரித்தவனே
 டம்புலீ யாடவாவே
யழகுமலி கோகழிச் சிவஞான முனிவனே
 டம்புலீ யாடவாவே (3)

உள்ளமாங் கானகத் தைம்புலச் செய்கையா
 யுற்றசெடி யாவும்வெட்டி
வுயர்வுறும் பத்தியெனு மசமதா லுழுதுமீக்
 குறுமன்பு நீர்பாய்ச்சியே
யெள்ளுதலி லாச்சிவம தாகும்விதை யூன்றியே
 றிணையற்ற சிவஞானமா
மெழிலுறும் பைங்கூழை யினிமைபெற வேவளர்த்
 தென்னுரு மிடர்விளைக்குந்
தள்ளுறும் மஞ்ஞான மாங்களை களைந்துநற்
 சாயுச்சி யப்பதவியாச்
சாற்றுபல னைக்கொண்டு பேரின்ப வமுதுணத்
 தானினைப் பினுமீகுவா
னள்ளலம் பணைகள்சூழ் துறைசைமா தவனிவனே
 டம்புலீ யாடவாவே.
யழகுமலி கோகழிச் சிவஞான முனிவனே
 டம்புலீ யாடவாவே. (4)

செற்றமில னென்றெணிச் சிறுபோது தாழ்த்தியேற்
 றீமையள விலவென்றியான்
செப்பிடவும் வேண்டுமோ தேவர்கோ வேயிதைத்
 தெற்றென வுணர்த்துமறிவாய்
கற்றையஞ் சடைமுடிக் கண்ணுதற் கினியனுங்
 காரண முணர்ந்திலாய்கொல்
கருதிலிவன் வாவென விளித்தும்வா ராமையக்
 காமாரி சற்றறியுமே
லுற்றநின் மாதுலற் பெற்றசா பம்புணர
 வுனைவிலக் கிடுவனந்தோ

வொல்லெனக் கலைபொருந் தேய்ந்துவீ ணாகுவை
யுரைத்தன னினித்தாழ்த் திடே
லற்றமிரு கைத்தவித் தான்றசிவ ஞானியினோ
டம்புலீ யாடவாவே
யழருபாவி கோகழிச் சிவஞான முனிவனோ
டம்புலீ யாடவாவே.
அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

# சிற்றிற் பருவம்.

பங்கப் பழனத் துறும்வாளைப் பகட்டே ரெழுந்து பகட்டின் முலை
பால்கான் றிடக்கன் றெனவோடிப் பைங்காய்க் கமுகின் குலைசாடித்
தெங்கின் குலையிற் றாயுதிர்த்துத் தீந்தேன் வருக்கைக் கனிகிழித்துத்
திளைத்து மீண்டு மதிதடவித் திரைத்துக் கணத்தி னுடுக்கனெல்லாம்
பொங்கப் புவியி லுதறியொரீஇப் போய்மா வண்ட முகடதனைப்
புடைத்துத் திறந்து வானதியிற் பொற்ப வாடி விளையாடுந்
திங்கட் டிருமத் துறைசைநகர்த் தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் றிறம்பெருக்குஞ் செல்வா சிற்றில் சிதையேலே(1)
கோவே யழித்து விளையாடுங் கொள்கை யுளத்துக் கொண்டனையேற்
குறையா தடியேன் றனைவருத்துங் கொடுமா வறுமை தனையழிக்க
மூவா மற்செம் பிணிற்களிம்பாய் முயங்கி யடியேன் றனைவருத்து
மூல மலத்தை யறவழிக்க மோக மழிக்க முனிவழிக்கத்
தாவே யுறும்யா னெனதென்னுந் தருக்கையழிக்க யிவையழித்து
றகையா முனக்கு வானுகத்தாற் சமைத்த விச்சிற் றிலையழிக்கிற்
றேவே யெய்தும் புகழுளதோ சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் றிறம்பெருக்குஞ் செல்வா சிற்றில் சிதையேலே(2)
சகனத் தடவா வியின்முளைத்துத் தகைசால் நாள மொன்றவிரு
தண்டா மரைமொட் டலராத தடைமா வதன மதியமெனக்
ககனத் துறுமென் றெணித்தனது கதிரால் வதன மதிக்கதிரைக்
கவர்ந்தங் கொளிசெய் தலர்த்தமனக் களிப்பாற் றழுவ லெனப்பணியின்
பகரற் கரிதாய்ப் படுமணிகள் பலகொண் டியற்றும் பதக்கமுலைப்
பரப்பிற் புரளுந் திருமடவார் பயில்கந் துகவாட் டயர்வளத்திற்
சிகரப் பன்மா ளிகைத்துறைசைத் தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் றிறம்பெருக்குஞ் செல்வா சிற்றில் சிதையேலே (3)

பேசுந் தன்மாத் திரைகளைந்தும் பிறங்கு மனமா திகண்மூன்றும்
பிணைத்துப் புரியட் டகச்சிற்றில் பேணிச் சிதைத்துங் காணவமாம்
மாசு கழித்துச் சிவானந்த மருவித் திரும்பாப் பெருவாழ்வை
வணங்கு மடியார்க் கருள்பெருஞ்சீர் வள்ளா வடியே மணலியற்றிக்
கூசு நாணு முணர்வுமிலாக் குழவிப் பிதியே பாடுமிக்
கொள்கை யுறுஞ்சிற் றிலையழிப்பிற் கொள்ளக் கிடப்ப தொன்றிலை
தேசிற் றிகழ்நீற் றொளித்துறைசைத் தேவா சிற்றில் சிதையேலே[யாற்
சிவஞா னத்தின் றிறம்பெருக்குஞ் செல்வா சிற்றில் சிதையேலே(4)

சேலிற் பிறழுங் கடங்கண்ணார் திளைக்கும் காமக் கலவியினிற்
செப்புங் காதற் சுவைகனிந்த தீஞ்சொற் பகற்கிள் ளைகள்புகலச்
சாலத் துறுநாண் கொடிகரசு தாற் றன்வாய் புதைக்குந் திருமடவார்
தகைசால் வதன மறியமனச் சாரக் கரும்பாந் தளைவெருட்டி
மாலிற் பறித்துஞ் சாபலினுல் வளங்கூர் தருமே னிக்கொடிகள்
மாகத் தரிவை யகப்புரவி வாவிச் செலச்செய் யுறும்வளப்பிற்
சீலத் தவர்போற் றிடுந்துறைசைத் தேவா சிற்றில் சிதையேலே
சிவஞா னத்தின் றிறம்பெருக்குஞ் செல்வாசிற்றில் சிதையேலே.

சிற்றிற் பருவம் முற்றிற்று.

## சிறுபறைப் பருவம்.

இங்கணி மிகுந்தொளிரு மங்கையமை பெய்தியுவ
ரின்புறப் புணருமதுவே
பெய்ந்திடப் படுமுத்தி யென்றுஞ் சுவர்க்கமே
யிணையிலா முத்தியென்றுந்
துய்க முற வைத்துகந் தங்கெடுதல் முத்தியென்
பெருண மருவல்முத்தி
தோன்றறிவி லாதுகற் போலக் கிடக்கலே
தோய்முத்தி யென்றுமருளாப்
பங்கமற யானென தெனுஞ்செருக் கறுகலே
பதிமுத்தி யென்றுமருளும்
பண்பிலார்க் குச்சிவன் றன்னடிப் பேற்றினைப்

செங்கமல வாவிபுடை சூழ்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருடவன்
சிறுபறை முழக்கியருளே. (1)

ஒப்பரிய நால்வர்தமி ழோதுறு முழக்கமு
மோங்குசித் தாந்தநெறியே
வோய்விலா தோதுறும் பொருள்விரித் திடுகுழுவி
னூடுதோன் றிடுமுழக்குஞ்
செப்பரிய வேதாக மப்பெரு முழக்கமுந்
தேசுறும் புலவர்பாடுந்
தீங்கரும் பென்னமது ரம்பெருகி யணியெலாஞ்
சேர்ந்துபல துறையுடைத்தாய்த்
தப்புதலி லாதநற் பாவிரித் துப்பொரு
டரும்பெரு முழக்குமடியார்
தாவிலா தோதுமுக் காலுமா லயமுறீஇத்
தாமெழுப் பிடுமரவொலித்
திப்பிய முழக்கமு மறாத்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருடவன்
சிறுபறை முழக்கியருளே. (2)

மூலமுத லாகவுறு மாதலங் கமலமதன்
மூர்த்தியா றையுமோர்ந்தபின்
முறைமையிற் காலிரண் டொன்றுற வியக்கிட
முளைத்தமுக் கனலெழுப்பி
யெலமுச் சந்திவட் டத்திடை னங்கண்
டிறைஞ்சியங் கெழுசிலம்பின்
இன்னிசை முழக்கது மடுக்கமகிழ் வாரமோ
டுகமக்கரி துணைக்கரத்தாற்
சாலவு முழக்குபறை யோதுமொலி கேட்கத்
தகும்பரி வடைந்தனமதாற்
றண்ணருட் குன்றமே நின்றளிர்க் காமுறத்
தமியமா னந்தமடையச்

சீலமுடை யோர்புகழ் திருத்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருடவன்
சிறுபறை முழக்கியருளே. (3)

உருவமா யருவமா யுருவருவ மாயவற்
றோங்குசித் தாந்தநெறியா
முன்னரிய வேதா கமக்கருத் தைக்கடந்
தொளிருமா னந்தவொளியாய்ப்
பெருமருவு சத்தியாற் பேணுதனு கரணாதி
பேதுறு மனுக்களுக்காப்
பெரிதுங் கொடுத்தளித் தழிவிலாவாழ்வுமருள்
பிறையையணி கடவுளேயலாற்
கருவிற் பிறந்திறந் துழல்சிறிய தேவரைக்
கர்த்தரென் றறிவிழந்து
கண்டியொடு பூதிவெண் டிருநீ றிகழ்ந்துதிரி
கயவர்வா யறைவதேய்ப்பத்
திருவிற் பொலிந்தணி திருத்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருடவன்
சிறுபறை முழக்கியருளே. (4)

பற்றற்ற மனமாரு முத்தமர்க் கிதயம்
பரிந்தரு ளிருஞ்சுடரதாய்ப்
பரவையிற் றுயில்வோ னருங்கமல பீடனும்
பண்ணவர் தமக்குமரிதா
யுற்றிடு பெருங்கருணை வாரியா மண்ணலே
வுலகமா னிடர்யாவரும்
ஊனவிழி யாற்கண் டிறைஞ்சிப் பிறப்பென்னு
முவரியத னைக்கடந்தே
மற்றதன் றிருவடிக் கரையடைய வருளினால்
மாண்புறக் கொண்டவடிவே
மன்னுமிஃ தாமெனமதித் துணை யடைந்தன
மனேரிவை யெமக்குவிழைவாஞ்

செற்றமதி லாத்தவ ருறுந்துறைசை நாயகன்
சிறுபறை முழக்கியருளே
சிவஞான போதநூற் பொருள்விரித் தருடவன்
சிறுபறை முழக்கியருளே. (5)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

## சிறுதேர்ப் பருவம்.

விண்ணு டுறும்பெரு மணிக்குல மிழைத்துமிளிர்
மேயமா ளிகைமேல்வயின்
மின்னனார் தங்கணவ ரோடேடி நீத்தெரி
மிகும்பொனா பரணமெல்லாந்
தண்ணார் பனிப்பகைவ னுறையிரத மதனைத்
தடைப்படுத் தியதுமல்லாற்
றன்கதிரி னலவன் சவிகெட்டு மாழ்கிடத்
தாம்புரி வளந்திகடருங்
கண்ணுபி ரக்கடவு ளோடயனு மாலுமனு
நினமுமன திற்கருதுறுங்
கருணையங் கடல்நமசி வாயதே சிகனருள்
கனிந்தவடி யார்குழுவொடுந்
இண்ணமுற வாழுமா தூர்ப்பதிச் செல்வனை
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (1)

பொங்குமுழு மதியுமோ கணிமனைவி தன்னொடும்
புல்லியா னந்தமுறலும்
பொற்புடைய வேளைமனை வியராய லுயங்கியே
புந்திநைந் தொன்றுகூடித்
தங்குதனு மெய்ப்பழுக் கிற்புலாக் கணிபது
தயங்கவுங் கந்தரத்தே
தாவிலா வாரமணி மாலைக ளிலங்கவுந்
தமனியக் கிரியிதென்றே
யிங்குளோ ரெண்ணக் கதிர்த்துப் பருத்தநல்
விளமுலையி னாதாமே
யின்றொண்டை யென்றுரு ழரியினைக் கையினி
விலங்குமல ரால்விலக்குந்

## சிறுதேர்ப் பருவம்.

திங்கள்முக மாதரணி தங்குகோ கழிநாத
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (2)

பம்பிமணி மங்குறவழ் வெண்கொடி விணூர்நதி
பரிப்பவம் மைத்தடிப்ப
படுவானை மீனுகளு வதைபொத்த மாளிகைப்
பந்திசூழ் மேனிலையினிற்
கம்பையந் திங்கைக் கனத்தைச் சினத்தெழுங்
கண்டமிடை யைம்பாலுடைக்
கன்னியர்த மின்னுயிர்க் காதல ரொடுந்தழீஇக்
கண்படச் சாளரத்தே
யும்பசுங் கிரணத் துவாமதி தனைத்தோழி
யொளிவிருந் தொன்றநோக்கு
மொண்முக மெனத்தழுவ லுற்றகை யெடுத்துமுக
மொல்லென மறைத்துநாணுஞ்
செம்பசு மனத்தடிய ரேத்துமர சூர்த்தலைவ
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (3)

அறியாமை யறிவென்னு மிரண்டையு மகற்றியே
யறிவினறி வருளினாலே
யறியா தறிந்ததை யகத்தே முறைப்படி
யமைத்துமப் பொருளிடத்தே
நெறியாரு மன்புவைத் துற்றவந் தக்கரண
நேசம்விட் டேயடங்கி
நின்றிடுதி யென்றுவே லப்பதே சிகனருள
நின்றுமந் நெறியிலேயே
பிரியாத சிவனும் பிரிந்துதோன் றிப்பேத
பிரபஞ்ச முந்தானதாம்
பெற்றியுந் தோன்றியிவை யாவுமல வாகப்
பிறங்கானு பவமுறுஞ்சீர்த்
திறமேவு கோமுத்தி புரமேவு செல்வனே
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (4)

கருமருவு கன்மவொப் பருளிழுப் பொருளுண்மை

காட்டியத் துவிதநிலையிற்
கருதிலொன் றாயும்வே றாயுமுட னாயுங்
கலந்தமை யுணர்த்தியாளும்
பெருமருவு ஞானகுரு நாதனென் றன்னைமெய்ப்
பெற்றியோர் பாடநாயேன்
பேரவாத் தூண்டத் துதிக்குமிப் பாவுநீ
பெற்றருள்வை யெத்துணையெனில்
அருள்மருவு நீமொழிந் தருள்கவியின் வழுவிலா
தான்றசொல் லோடுசேர்த்தங்
கவையமைத் திட்டசொல் லும்பிணைத் தருளலா
லாமெனத் தேறினென்காண்
திருமருவு கோமுத்தி புரமேவு செல்வனே
சிறுதே ருருட்டியருளே
சிவஞான தேவநற் றவஞான போதனே
சிறுதே ருருட்டியருளே. (5)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

ஸ்ரீ சிவஞானசுவாமிகள் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

## வாழ்த்து.

பாங்குபெறு வேதநெறி சைவநெறி வாழ்கவெம்
பவமெலாம் நீக்கிநாளும்
பரிவினொ டருடுறைசை ஞானமுனி வரனிரு
பதாம்புயத் தணையும்வாழ்க
வோங்குபுக ழார்திருத் துறைசையா தீனமு
முவந்தென்றும் வாழ்கவடியே
மொப்பிலா ஞானகுரு வாகுமத் தையாவி
னுபயபத கமலம்வாழ்க
ஓங்கடைவு றுச்சைவ சித்தாந்த வள்ளலாந்
தேவைநகர் வாழ்வைசியச்
செம்மலாம் ராமநா தப்பெயர்கொள் சீமான்
சிறக்கவெந் நாளும்வாழ்க
நீங்கரிய தாகவித் தமிழச்சி னேற்றியே
நிலவுமழ கப்பவள்ளல்
நிறைசெல்வ மோடுசற் புத்திரப் பேருற்று
நீடூழி வாழ்கமாதோ

ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.
ஸ்ரீ சிவஞானசுவாமிகள் திருவடிவாழ்க.